பராசக்தி துணை

எத்தேசங்களிலும் இடைவிடாமற்

சிந்தித்துவரும்

# மாரியம்மன் தாலாட்டு



உ

பராசக்தி துணை

எத்தேசங்களிலும் இடைவிடாமற் சிந்தித்துவரும்

# மாரியம்மன் தாலாட்டு

விநாயகர் துதி

காப்பு

கொச்சகக் கலிப்பா

பூதலத்தில் யாவர்களும் போதரவா யென்னுளும்
மாதரசி யென்று வாழ்த்துகின்ற மாரியம்மன்
சீதரனர் தங்கை சிறப்பான தாலாட்டைக்
காதலுடனேதக் கணபதியுங் காப்பாமே.

# வெண் செந்துரை

முந்திமுந்திவிநாயகரே முக்கண்ணனுர்தன்மகனே
கந்தருக்குமுன்பிறந்த கற்பகமேமுன்னடவாய்
வேலவர்க்குமுன்பிறந்த விநாயகரேமுன்னடவாய்
வேம்படியிற்பிள்ளையாரே விக்கினரேமுன்னடவாய்
பேழைவயிற்றேனே பெருச்சாளிவாகனரே
காரணமால்மருகா கற்பகமேமெய்ப்பொருளே
சீ[illegible]நல்மருகா செல்வக்கணபதியே
ஒற்றைக்கொம்போனே யுமையாள்திருமகனே
கற்றைச்சடையணிந்த கங்காதரன்மகனே
வித்தைக்குவிநாயகனே வெண்ணையுண்டோன்மருகா
மத்தக்கரிமுகவா மாயோன்மருகோனே
ஐந்துகரத்தோனே யானைமுகத்தோனே
தந்திமதவாரணனே தற்பரனேமுன்னடவாய்
நெஞ்சிற்குடியிருந்து நீயெனக்குமுன்னடவாய்
பஞ்சஞ்சுமெல்லடியாள் பார்வதியாள்புத்திரனே
வேழமுகத்தோனே விநாயகரேமுன்னடவாய்

தாழ்விலாச்சங்கரனுர் சற்புத்திராவாருமையா
முன்னடக்கும்பிள்ளையார்க்கு கன்னடக்கம்பொன்னுலே
கன்னடக்கம்பொன்னுலே கற்சிலம்புமுத்தாலே
முத்தாலேதண்டைகொஞ்ச முன்னடவாய்பிள்ளையாரே
செல்வக்கணபதியுன் சீர்பாதம்நான்மறவேன்

## சரஸ்வதி துதி

தாயேசரஸ்வதியே சங்கரியேமுன்னடவாய்
என்தாயேகலைவாணி யேகவல்லிநாயகியே
வாணிசரஸ்வதியே வாக்கில்குடியிருந்து
என்னுவிற்குடியிருந்து நல்லோசைதாருமம்மா
கமலாசனத்தாளே காரடிபெற்றவளே
என்-குரலிற்குடியிருந்து கொஞ்சடிபெற்றவளே
என்-நாவுதவராமல் நல்லோசைதாருமம்மா
மாரியம்மன்தன்கதையை மனமகிழ்ந்துநான்பாட
சரியாகஎன்நாவில் தங்கிக்குடியிருமம்மா
கன்னனூர்மாரிமுத்தே கைதொழுதுநான்பாட
பின்னமில்லாமல் பிறகிருந்துகாருமம்மா

# மாரியம்மன் துதி

மாயிமகமாயி மணிமந்திரசேகரியே
ஆயிவுமையவளே ஆதிசிவன்தேவியரே
மாரித்தாய்வல்லிவியே மகராசிகாருமம்மா
மாயன்சகோதரியே மாரிமுத்தேவாருமம்மா
ஆயன்சகோதரியே ஆஸ்தானமாரிமுத்தே
தாயேதுரந்தரியே சங்கரியேவாருமம்மா
திக்கெல்லாம்போற்று மெக்காலதேவியரே
எக்காலதேவியரே திக்கெல்லாம்நின்றசத்தி
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே நாரணனுர்தங்கையம்மாள்
நாரணனுர்தங்கையம்மாள் நல்லமுத்துமாரியரே
நல்லமுத்துமாரியரே நாககன்னிதாயாரே
உன்-கரகம்பிறந்ததம்மா கன்னனுர்மேடையிலே
உன்-வேம்புபிறந்ததம்மா விஜயநகர்பட்டணமாம்
உன்-சூலம்பிறந்ததம்மா துலங்குமணிமண்டபத்தில்
உன்-அலகுபிறந்ததம்மா அயோத்திநகர்பட்டணமாம்

உன்-பிரம்புபிறந்ததம்மா பிச்சாண்டிசந்நிதியாம்
உன்-உடுக்கைபிறந்ததம்மா உத்திராட்சபூமியிலே
உன்-பம்பைபிறந்ததம்மா பளிங்குமாமண்டபத்தில்
உன்-கருத்துப்பிறந்ததம்மா கஞ்சகிரியிந்திரபுரம்
உன்-மருளர்தழைக்கவம்மா வையகங்களீடேற
உன்-குமாரவர்க்கந்தான்றழைக்க கொம்பனையேமாரிமுத்தே
உனக்கு-மூன்றுகரகமம்மா முத்தானநற்கரகம்
உனக்கு-ஐந்துகரகமம்மா அசைந்தாடும்பொற்கரகம்
உனக்கு-ஏழுகரகமம்மா எடுத்தாடும்பொற்கரகம்
உனக்கு-பத்துகரகமம்மா பதிந்தாடும்பொற்கரகம்
வேப்பிலையும்பொற்கரகம் விதிவிளையாடிவர
ஆயிரங்கண்ணுடையாள் அலங்காரிவாருமம்மா
பதினாயிரங்கண்ணுடையாள் பராசத்திவாருமம்மா
துலுக்காணத்தெல்லையெல்லாம் குலுங்காடப்பெண்பிறந்தாய்
துலுக்காணத்தெல்லைவிட்டு துரந்தரியேவாருமம்மா
தாயேதுரந்தரியே சங்கரியேவாருமம்மா
மலையாளதேசமெல்லாம் விளையாடப்பெண்பிறந்தாய்

மலையாளதேசம்விட்டு வாருமம்மாயிந்தமுகம்
சமைந்தாய்சமயபுரம் சாதித்தாய்கன்னபுரம்
இருந்தாய்விலாடபுரம் இனியிருந்தாய்கன்னபுரம்
சமையபுரத்தாளே சாம்பிராணிவாசகியே
சமையபுரத்தெல்லைவிட்டு நாயாரேவாருமம்மா
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
கன்னபுரத்தெல்லைவிட்டு காரணியேவந்தமரும்
கடும்பாடியெல்லையெல்லாம் காவல்கொண்டமாரிமுத்தே
ஊத்துக்காட்டமர்ந்தவளே உதிரபலிகொண்டவளே
படவேட்டமர்ந்தவளே பரசுராமனைப்பெற்றவளே
படவேட்டைவிட்டுமெள்ள பத்தினியேவாருமம்மா
பெரியபாளையத்தமர்ந்த பேச்சியெனுமாரியரே
பெரியபாளையத்தைவிட்டு பேரரசிவாருமம்மா
ஆரணிபெரியபாளையமாம் அதிலிருக்குமாற்றங்கரை
ஆற்றங்கரைமேடைவிட்டு ஆச்சியரேவாருமம்மா
வீராம்பட்டணமமர்ந்த வேதாந்தமாரிமுத்தே
கோலியனூரெல்லையிலே குடிகொண்டமாரியரே

அந்தரத்திற்றேரோட அருகேசெடிலசைய
உச்சியிற்றேரோட உயரச்செடிலசைய
மச்சியிற்றேரோட மகரச்செடிலசைய
பக்கங்கயிரோட பகரச்செடிலசைய
ஆண்டகுருதேசிகரை அறியாதமானிடரை
தூண்டிலிட்டாட்டிவைக்கத் தோன்றினாய்நீயொருத்தி
சத்தியாய்நீயமர்ந்தாய் தனி குட்டிகாவுகொண்டாய்
எல்லையிலேநீயமர்ந்தாய் எருமைக்கிடாகாவுகொண்டாய்
உன்னைப்போல்தெய்வம் உலகத்தில்கண்டதில்லை
என்னைப்போல்பிள்ளைகள்தா னெங்குமுண்டுவையகத்தில்
கோர்த்தமுத்துவடமசைய கொங்கைரெண்டும்பாலொழுக
ஏற்றவர்க்குவரந்தருவாய் எக்காலதேவியரே
எக்காலதேவியரே திக்கெல்லாமாண்டவளே
திக்கெல்லாமாண்டவளே திகம்பரியேவாருமம்மா
முக்கோணசக்கரத்தில் முதன்மையாய்நின்றசக்தி
அறுகோணந்தன்னில்வந்து ஆச்சியரேவந்தமரும்
தாயேதுரந்தரியே சங்கரியேவாருமம்மா

மாயிமருளியரே மணிமந்திரசேகரியே
வல்லாண்மைக்காரியரே வழக்காடும்மாரிமுத்தே
வல்லவரைக்கொன்றாய் வலியவரைமார்பிளந்தாய்
நீலிகபாலியம்மா நிறைந்ததிருச்சூலியரே
நாலுமூலையோமகுண்டம் நடுவேகனகசபை
கனகசபைவீற்றிருக்கும் காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே நாரணனார்தங்கையரே
நாரணனார்தங்கையரே நல்லமுத்துமாரியரே
நடலைச்சுடலையம்மா நடுச்சுடலைதில்லைவனம்
தில்லைவனத்தெல்லைவிட்டு திரும்புமம்மாவிந்தமுகம்
வார்ப்புச்சிலையாளே வச்சிரமணித்தேராளே
தாண்டி நடைபெருமன் தாண்டிமுள்ளுதைபெருமன்
மண்டையிலேதைத்தமுள்ளு மார்புருவிப்போகுதம்மா
பக்கத்திற்றைத்தமுள்ளு பதைத்துதுடிக்குதம்மா
தொண்டையிலேதைத்தமுள்ளு தோளுருவிப்போகுதம்மா
கத்திபோல்வேப்பிலையை கைக்கூறிட்டாய் லோகமெங்கும்
ஈட்டிபோல்வேப்பிலையை யினியனாய்ப்பிடித்துக்கொண்டவளே

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri



பத்திரிக்குள்ளிருக்கும் பாவனையாரறிவார்
வேப்பிலைக்குள்ளிருக்கும் வித்தைகளையாரறிவார்
செடிலோதுடைபெருமன் தூண்டிமுள்ளுகைபெருமன்
தூண்டிமுள்ளைத்தூக்கி துடுக்கடக்கும்மாரிமுத்தே
ஒற்றைச்செடிலாட ஊரனைத்தும்பொங்கலிட.
இரட்டைச்செடிலாட யிரண்டணியும்பொங்கலிட
பக்கச்செடிலாட படைமன்னர்கொக்கரிக்க
பரமசிவன்வாசலிலே பாற்பசுவுகாவுகொண்டாய்
ஏமனிடவாசலிலே எருமைக்கிடாகாவுகொண்டாய்
எருமைக்கிடாகாவுகொண்டாய் எக்காலதேவியரே
எக்காலதேவியரே திக்கெல்லாமாண்டசத்தி
காசிவளநாட்டாளே க்ன்னியாகுமாரியரே
காசிவளநாட்டைவிட்டு கட்டழகிவாருமம்மா
ஊசிவளநாடு உத்தியாகுமரிதேசம்
அறியாதான்பாடுகிறேன் அம்மைதிருக்கதையை
தெரியாதான்பாடுகிறேன் தேவிதிருக்கதையை
எட்டென்ருலிரண்டறியேன் ஏழையம்மாவுன்னடிமை

பத்தென்றுவொன்றறியேன் பாலனம்மாவுன்னடிமை
பாடவகையறியேன் பாட்டின்பயனறியேன்
வருந்தவகையறியேன் வர்ணிக்கப்பேரறியேன்
பேருமறியேனம்மா பெற்றவளேயென்தாயே
குழந்தைவருந்துறதுன் கோவிலுக்குக்கேட்கிலையோ
மைந்தன்வருந்துறதுன் மாளிகைக்குக்கேட்கிலையோ
பாலன்வருந்துறது பார்வதியேகேட்கிலையோ
கோயிற்கடிமையம்மா கொண்டாடும்பாலகண்டி
மாளிகையைவிட்டு மாதாவும்வாருமம்மா
சந்நிதியைவிட்டுத் தாயாரும்வாருமம்மா
அரண்மனையைவிட்டு ஆத்தாளேவாருமம்மா
கோயிற்கடிமையம்மா கொண்டாடும்பாலகண்டி
சந்நிதிமைந்தனம்மா சங்கரியேபெற்றவளே
வருந்தியழைக்கிறேன் வண்ணமுகங்காணாமல்
தேடியழைக்கிறேனே தேவிமுகங்காணாமல்
ஏழைக்குழந்தையம்மா எடுத்தோர்க்குப்பாலகண்டி
பாலன்குழந்தையம்மா பார்த்தோர்க்குப்பாலகண்டி

மைந்தன்குழந்தையம்மா மகராசிகாருமம்மா
கல்லோடியுன்மனது கரையலையோஎள்ளளவும்
இரும்போடியுன்மனது இரங்கலையோஎள்ளளவும்
கல்லுங்கரைந்திடுமுன் மனங்கரையாதென்னவிதம்
இரும்புமுருகிடுமுன் னிருதயமுருகாதென்னவிதம்
முன்செய்ததீவினையோ முற்காலத்துப்பயனோ
பெரியோர்கள்செய்ததீவினையோ பெற்றவளேசொல்லுமம்மா
ஏதுமறியேனம்மா ஈஸ்வரியேசொல்லுமம்மா
கடும்பாடியெல்லையிலே கட்டழகிவீற்றிருப்பாய்
கடும்பாடியெல்லைவிட்டு கட்டழகிவாருமம்மா
கரகத்தழகியரே கட்டழகிமாரிமுத்தே
கரகத்துமீதிருந்து கட்டழகிகொஞ்சுமம்மா
கும்பத்தழகியம்மா கோபாலன்தங்கையரே
கும்பத்துமீதிருந்து கொஞ்சுமம்மாபெற்றவளே
கொஞ்சுமம்மாபெற்றவளே குறைகளொன்றும்வாராமல்
உனக்கு-பட்டுபளபளென்ன பாடகக்கால்சேராட
உனக்கு-முத்துமொளமொளென்ன மோதிரக்கால்சேராட

உலகமெல்லாம்முத்தெடுக்க உள்ளபடிதான்வந்தாய்
தேசமெல்லாம்முத்தெடுப்பாய் தேவிகன்னனூராளே
முத்தெடுத்துதான்புகுந்தாய் உத்தமியேமாரிமுத்தே
உனக்கு-ஈச்சங்குறக்கூடை யிருக்கட்டும்பொன்னலே
உனக்கு-தாழங்குறக்கூடை தனிக்கட்டும்பொன்னலே
குறக்கூடைமுத்தெடுத்து கொம்பனையே நீபுகுந்தாய்
கோயிலின்சந்தடியில் கூப்பிட்டால்கேளாதோ
அரண்மனைச்சந்தடியில் அழைத்தாலுங்கேளாதோ
மாளிகையின்சந்தடியில் மாதாவேகேட்கிலேயோ
மக்களிடசந்தடியோ மருமக்கள்சந்தடியோ
பிள்ளைகளின்சந்தடியோ பேரன்மார்சந்தடியோ
அனந்தல்பெருமையோ ஆசாரச்சந்தடியோ
சந்தடியை நீக்கியம்மா தாயாருமிங்கேவர
கொல்லிமலையாண்டவனைக் குமரகுருபரனை
காத்தவராயனைத்தான் கட்டழகிதானமையும்
தொட்டியத்துச்சின்னனை துரைமகனைத்தானமையும்
மதுரைவிரப்பனையென் மாதாவேதானமையும்

பாவாடைராயனைத்தான் பத்தினியேதானழையும்
கருப்பண்ணசுவாமியையுங் கட்டழகிதானழையும்
சங்கிலிகருப்பனைத்தான் சடுதியிற்றானழையும்
முத்தாலுராவுத்தன் முனையுள்ளசேவகரை
பெரியபாளையத்தமர்ந்த பேச்சியரேமாதாவே
பாளையக்காரியம்மா பழிகாரிமாரிமுத்தே
கன்னனூர்மாரிமுத்தே கலகலெனநடனமிடும்
உன்னைப்பணிந்தவர்க்கு உற்றதுணை நீயிரம்மா
ஆதிபரமேஸ்வரியே அருகேதுணை நீயிரம்மா
உன்னைப்போல்தெய்வத்தை உலகத்தில்கண்டதில்லை
என்னைப்போல்மைந்த ரெங்குமுண்டுவையகத்தில்
உன்-மகிமையறிந்தவர்கள் மண்டலத்தில்யாருமில்லை
உன்-சேதியறிவாரோ தேசத்துமானிடர்கள்
உன்-மகிமையையானறிந்து மண்டலத்தில்பாடவந்தேன்
உன்-மகிமையறியாதுலகில் மாண்டமனுகோடியுண்டு
உன்-சேதியறியாதுலகில் செத்தமனுகோடியுண்டு
தப்புபிழைவந்தாலும் சங்கரியேநீபொருத்து

ஆறுதப்புநூறுபிழை அடியார்கள்செய்ததெல்லாம்
மனதுபொறுத்து மனமகிழ்ச்சியாகவேணும்
தேவிமனம்பொறுத்து தீர்க்கமுடன்ரட்சியம்மா
கொண்டுமனம்பொறுத்து கொம்பனையேகாருமம்மா
கார்க்கக்கடனுனக்கு காரணசவுந்தரியே
காரடிபெற்றவளே காலுதலைநோகாமல்
வேணுமென்றுகாரடி நீ வேப்பஞ்சிலையாளே
பக்கத்துணையிருந்து பாலகனைக்காருமம்மா
பொரிபோலெழும்பிநீ பூரித்துஆலித்து
ஆலித்துநீயெழும்பி ஆத்தாளிறக்குமம்மா
சிரசினில்முத்தையம்மா தற்காத்துநீயிறக்குமம்மா
முகத்தினில்முத்தையம்மா முன்னுதாய் நீயிறக்கும்
கழுத்தினில் முத்தையம்மா கட்டழகிநீயிறக்கும்
தோளினில்முத்தையம்மா துரந்தரியே நீயிறக்கும்
மார்பினில்முத்தையம்மா மாதாவே நீயிறக்கும்
வயிற்றினில்முத்தையம்மா மயேஸ்வரியே நீயிறக்கும்
துடையினில்முத்தையம்மா தேவியே நீயிறக்கும்

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri



முழங்காலில்முத்தையம்மா மீனாக்ஷி நீயிறக்கும்
கணுக்காலில்முத்தையம்மா காமாக்ஷி நீயிறக்கும்
பாதத்தில்முத்தையம்மா பாரினிலிறக்கிவிடும்
பூமியிலிறக்கிவிடும் பெற்றவளேகாருமம்மா
பெற்றவளேதாயே பேரரசிமாரிமுத்தே
உற்றதுணை நீயிருந்து உகந்தரியேகாருமம்மா
உன்னைவிடபூமிதனில் உறுதுணைவேறுமுண்டோ
பக்கத்துணையிருந்து பாதுகாத்துரட்சியம்மா
செக்கச்சிவந்தவளே செங்கண்ணன்தங்கையரே
மங்கையெனும்மாதரசி மகாராசிகாருமம்மா
திங்கள்வதனியரே தேவிகன்னனூராளே
எங்கள்குலதேவியரே ஈஸ்வரியேகண்பாரும்
மங்களவினோதி மாதாவேகண்பாரும்
ஏழைக்கிரங்காமல் இப்படியே நீயிருந்தால்
வாழ்வதுநானெக்காலம் வார்ப்புச்சிலையாளே
ஆயிமகமாயி ஆரணங்குசொற்காரணியே
மாயிமகமாயி மணிமந்திரசேகரியே

இரங்கிரங்குந்தாயாரே யெங்களைக்காப்பாற்றுமம்மா
மாரித்தாய்வல்லவியே மகாராசிகாருமம்மா
வீரணன்சோலையிலே ஆரணமதானசத்தி
நீதிமன்னர்வாசலிலே நேராய்க்கொலுவிருந்தாய்
கொலுவிருந்தசத்தியரே கோர்த்தமுத்து நீயிறக்கும்
கோர்த்தமுத்து நீயிறக்கும் கொம்பனையேமாரிமுத்தே
போட்டமுத்து நீயிறக்கும் பொய்யாதவாசகியே
பொய்யாதவாசகியே புண்ணியவதியீஸ்வரியே
செடிலோதுடைபெருமன் தூண்டிமுள்ளுகைபெருமன்
அடங்காதமானிடரை ஆட்டிவைக்கும்மாரிமுத்தே
துஷ்டர்கள்தெண்டனிட்டு துடுக்கடக்கும்மாரிமுத்தே
கண்டவர்கள்தெண்டனிட்டு கலக்கமிடும்மாரிமுத்தே
அண்டாதபேர்களைத்தான் ஆணுவத்தைத்தானடக்கி
இராஜாக்களெல்லோரும் நலமாகத்தான்பணிய
மகுடமுடிமன்னர் மனோன்மணியைத்தான்பணிய
கிரீடமுடிதரித்த கீர்த்தியுள்ளராஜாக்கள்
மகுடமந்திரிகள்வந்து மன்னித்தெண்டனிட்டுநிற்க

பட்டத்துரைகள் படைமுகத்துராஜாக்கள்
வெட்டிக்கேலித்துவரும் வேதாந்தவேதியர்கள்
துஷ்டர்களைத்தானடக்கும் சூலிகபாலியம்மா
அடங்காதமானிடரை யடிமைபலிகொண்டசக்தி
மிஞ்சிவரும்ராட்சதரை வெட்டிவிருதுண்டகண்ணே
நந்தமென்றமானிடரை தற்காக்கும்பராபரியே
அவரவர்கள்தான்பணிய வரங்கினையைப்பெற்றவளே
சிவனுடனேவாதாடும் சித்தாந்தமாரிமுத்தே
அரனுடனேவாதாடும் ஆஸ்தானமாரிமுத்தே
பிரமனுடன்வாதாடும் பெற்றவளேமாரிமுத்தே
விஷ்ணுவுடன்வாதாடும் வேதாந்தமாரிமுத்தே
ஏமனுடன்வாதாடும் எக்காலதேவியரே
தேவனுடன்வாதாடும் தேவிகன்னனூராளே
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
காரணசவுந்தரியே கர்த்தனிடதேவியரே
நெருப்பம்மாஉன்சொரூபம் நிஷ்டூரக்காரியரே
அனலம்மாஉன்சொரூபம் ஆஸ்தானமாரிமுத்தே

தணலம்மா உன்சொருபம் தரிக்கமுடிபோகாது
அண்டாநெருப்பேயம்மா ஆதிபரமேஸ்வரியே
காத்தானைப்பெற்றவளே கட்டழகிமாரிமுத்தே
தொட்டியத்துச்சின்னானை தொழுதுவரப்பண்ணசத்தி
கருப்பனையுங்கூடவேதான் கிண்டுபணியவைத்தாய்
பெண்ணரசிக்காகப் பிள்ளையைக்கழுவில்வைத்தாய்
ஆணழகிக்காக மைந்தனைக்கழுவில்வைத்தாய்
அ[illegible]ங்காதபிள்ளையென ஆண்டவனைக்கழுவில்வைத்தாய்
துஷ்டனென்றுசொல்லி துடுக்கடக்கிக்கழுவில்வைத்தாய்
பாரினில்முத்தையம்மா பத்தினியேதாயாரே
வாரியெடுக்கவொரு வஞ்சியரையுண்டுபண்ணாய்
முத்தெடுக்குந்தாதி மோகனப்பெண்ணேயென்று
தாதியரைத்தானழைத்து தாயாரே முத்தெடுப்பாய்
முத்தெடுத்துதான்புகுந்து உத்தமியாள்மாரிமுத்தே
மாயிமகமாயி மணிமந்திரசேகரியே
ஆயிவுமையவளே ஆஸ்தானமாரிமுத்தே
பாரமுத்தைநீயிறக்கிப் பாலகனைக்காருமம்மா

காரடி பெற்றவளே காலுதலைநோகாமல்
சொற்கேளாப்பிள்ளையென்று தூண்டிக்கழுவில்வைத்தாய்
கழுதனக்குமோர்வார்க்க கட்டழகியுண்டுபண்ணாய்
நல்லதங்காள்யுண்டுபண்ணாய் நற்கழுவுக்குமோர்வார்க்க
உரியில்தயிர்வார்க்க உத்தமியேயுண்டுபண்ணாய்
உன்-மருமகனைக்காத்தாப்போ லிவ்வடிமையைக்காருமம்மா
எவ்வளவுநேரமம்மா ஏறெடுத்துப்பாருமம்மா
கடுகளவுநேரமம்மா கண்பார்க்கவேணுமம்மா
கடைக்கண்ணால்நீபார்த்தால் கடைத்தேறிப்போவேனம்மா
பாரளந்தோன்தங்கையரே பாலனைக்காருமம்மா
பேரரசிமாரிமுத்தே பிள்ளைகளைக்காருமம்மா
மகமாயிமாரிமுத்தே மைந்தர்களைக்காருமம்மா
பெற்றவளே மாரிமுத்தே பிள்ளைகளைக்காருமம்மா
ஆணாழகிமாரிமுத்தே அடிமைகளைக்காருமம்மா
பூணாரம்பூண்டவளே பிள்ளைக்களைக்காருமம்மா
பாரமெடுக்கவம்மா பாலகனாலாருமோதான்
பூணாரந்தாமெடுக்க பிள்ளையாலாருமோதான்

வருத்தப்படுத்தாதே மாதாவேகண்பாரும்
பாலன்படுந்துயரம் பாக்கியவதிபார்க்கிலேயோ
மைந்தன்படுந்துயரம் மாதாவேபார்க்கிலேயோ
குழந்தைபடுந்துயரம் கொம்பனையேபார்க்கிலேயோ
சிற்றடிகள்படுந்துயரம் தேவியரேபார்க்கிலேயோ
பூணூரமுத்திரையைப் பெற்றவளேதானிறக்கும்
ஆபரணமுத்திரையை ஆத்தாளிறக்குமம்மா
இறக்கிரக்குந்தாயாரே எங்களைக்காப்பாற்றுமம்மா
அடிமைதனைக்காப்பாற்றி யாணமுகிநீயிறக்கும்
கும்பத்துமாரியம்மா கொலுவிலலங்காரியரே
கொலுவிலலங்காரியரே கோர்த்தமுத்துநீயிறக்கும்
கோர்த்தமுத்துநீயிறக்கும் கொம்பனையேமாரிமுத்தே
மாரியென்றால்மழைபொழியும் தேவியென்றால்தேன்சொரியும்
தேவியென்றால்தேன்சொரியும் திரிபுரசுந்தரியே
திரிபுரசுந்தரியே தேசத்துமாரியம்மா
பொன்னுமுத்துமாரியரே பூரணசவுந்தரியே
தாயாரேபெற்றவளே சத்தகன்னிசுந்தரியே

பேருமறியேனம்மா பெற்றவளே தாயாரே
குருடன்கைக்கோலென்று கொம்பனையே நீயறிவாய்
கோலைப்பிடுங்கிக்கொண்டால் குருடன்பிழைப்பானே
இப்படிக்கு நீயிருந்தா லினிபிழையோந் தாயாரே
கலிபிறக்குமுன்பிறந்த கனகத்தோர்மாரிமுத்தே
யுகம்பிறக்குமுன்பிறந்த உத்தண்டமாரிமுத்தே
கலியுகத்தில்தாயே கண்கண்டதெய்வம் நீ
உன்னைப்போல்தெய்வம் உலகத்தில்கண்டதில்லை
என்னைப்போல்மைந்தர்தா னெங்குமுண்டுவையகத்தில்
அனலைமதியாய் நீ யாவரையுஞ்சட்டைபண்ணாய்
புனலைமதியாய் நீ பூலோகஞ்சட்டைபண்ணாய்
வருந்தியழைக்கிறேனுன் திருமுகத்தைக்காணாமல்
பாலனைக்காத்து பாதத்தாலுதைத்துவிடு
மைந்தனைக்காத்து மகராசியுதைத்துவிடு
குழந்தையைக்காத்து கொம்பனையேயுதைத்துவிடு
ஆதிபரஞ்சோதி அங்குகண்ணேவாருமம்மா
வெள்ளிக்கிழமையிலே கொள்ளிக்கண்மாரியரே

வெள்ளியிலுந்திங்களிலும் வேண்டியபேர்பூசைசெய்ய
பூசைமுகத்திற்குப் போனேனென்றுசொல்லாதே
இந்தமனையிடத்தி லீஸ்வரியேவந்தருள்வாய்
வந்தமனை வாழுமம்மா யிருந்தமனை யீடேறும்
இருந்தமனை யீடேற ஈஸ்வரியேவந்தருள்வாய்
கண்பாரும்கண்பாரும் கனகவல்லித்தாயாரே
நண்பானபிள்ளைகளை நலிந்திடச்செய்யாதே
உன்னை நம்பினோரை வோய்ந்திடச்செய்யாதே
அந்நீதஞ்செய்யாதே ஆயிமகமாயி
வேம்புரதமேறி வித்தகியேவாருமம்மா
பச்சிலைரதமேறி பார்வதியேவாருமம்மா
கொலுவிருந்தசத்தி கோர்த்தமுத்தை நீயிறக்கும்
போட்டமுத்தை நீயிறக்கும் பூலோகமாரிமுத்தே
கேளிக்கையாகக் கிளிமொழியேமுத்திறக்கும்
அரும்பாலகன்றன்னை அவஸ்தைப்படுத்தாதே
வருத்தப்படுத்தாதே மாதாவேகண்பாரும்
அன்னமிரங்கவம்மா ஆத்தாளேகண்பாரும்

ஊட்டத்தைநீகொடுத்து உத்தரியேகாருமம்மா
இறக்கங்கொடுத்துநீ ஈஸ்வரியேகாருமம்மா
காருமம்மாபெற்றவளே காலுதலைநோகாமல்
எங்கேயோபாராமுகமா யிருந்தேனென்றுசொல்லாதே
அந்திரந்திபூசையிலே அசதியாபண்ணாதே
ஒட்டாரம்பண்ணாதே ஓங்காரிமாரிமுத்தே
பாவாடம்நேருமம்மா பழிகள்வந்துசேருமம்மா
பாவாடம்நேர்ந்ததென்றால் பாருலகுக்கேறாது
கண்டார்நகைப்பார்கள் கலியுகத்தாரேசுவார்கள்
கலியுகத்தாரேசுவார்கள் கட்டழகிமாரிமுத்தே
பார்த்தார்நகைப்பார்கள் பரியாசம்பண்ணுவார்கள்
உதடுபடைத்தவர்கள் உதாசினஞ்சொல்லுவார்கள்
பல்லைப்படைத்தவர்கள் பரியாசம்பண்ணுவார்கள்
நாவைப்படைத்தவர்கள் நாணயங்கள்பேசுவார்கள்
பார்த்தார்நகைக்கவம்மா பரியாசம்பண்ணாதே
காஞ்சிப்பதியாளே காமாட்சிதாயாரே
தாயாரேபெற்றவளே தயவுவைத்துக்காருமம்மா

மாதாவேபெற்றவளே மனம்பொறுத்துக்காருமம்மா
பார்வதியேபெற்றவளே பக்ஷம்வைத்துக்காருமம்மா
ஆயிரங்கண்ணுடைய அலங்காரிவாருமம்மா
பதினுயிரமுத்தினிலே பார்த்தெடுத்தவாணிமுத்து
நூருயிரமுத்தினிலே நூற்றெடுத்தவாணிமுத்து
ஆயிரங்க[illegible]ழுந்துதனி லாத்தாள்வளர்ந்தெழுந்தாள்
நாகத்தின்கண்ணேயம்மா நல்லவிடைப்பாம்பே
சேஷத்தின் கண்ணேயம்மா சின்னவிடைப்பாம்பே
அஞ்சுதலைநாகமுனக்கு கொஞ்சிவிளையாடுதம்மா
பத்துதலைநாகமம்மா பதிந்துவிளையாடுதம்மா
செந்தலைநாகமம்மா சேர்ந்துவிளையாடுதம்மா
கருந்தலைநாகமம்மா காக்குதம்மாவுன்கொலுவில்
சேஷனென்றபாம்பையெல்லாம் சேரவேபூண்டசத்தி
நாகமென்றபாம்பையெல்லாம் நலமாகபூண்டசத்தி
அரவமென்றபாம்பையெல்லா மழகாகப்பூண்டசத்தி
ஆபரணமாய்பூண்டாய் அழகுள்ளபாம்பையெல்லாம்
நாகங்குடைபிடிக்க நல்லபாம்புதாலாட்ட

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri



பூணுரமாய்பூண்டாய் பொன்னுதிருமேனியெல்லாம்
நாலாட்டத்தாலாட்டத் தாயார்மனமிரங்க
சேஷன்குடைகவியச் செந்நாகம்வட்டமிட
வட்டமிட்டுவிட்டிருந்தாய் மாரிகன்னனூராளே
மார்மேலேநாகமம்மா மடிமேல்புரண்டாட
தோள்மேலேநாகமம்மா தொடைமேற்புரண்டாட
மார்மேலுந்தோள்மேலும் வன்னமடிமேலும்
கோத்திரிவிளையாடுதம்மா கோபாலன்தங்கையரே
ஏழையாலருமோதான் ஈஸ்வரியைத்தோத்தரிக்க
குழந்தையாலருமோதான் கொம்பனையைத்தோத்தரிக்க
அடியேனாலருமோதான் ஆத்தாளைத்தோத்தரிக்க
என்னாலருமோதான் ஈஸ்வரியைத்தோத்தரிக்க
இல்லையென்பார்பங்கில் ஈஸ்வரிமாரிமுந்தே
நில்லாயமைநாரி நித்திரந்தாண்டவியே
உண்டென்பார்பங்கில் ஒளிவிளக்காய்நின்றசத்தி
பார்த்தோர்க்குசெல்வமம்மா பாலன்குழந்தையம்மா
உன்னைப்பணிந்தோர்க்கு உருமார்பிலாணியம்மா

நினைந்தோர்க்குதெய்வமம்மா எதிர்த்தார்க்குமார்பிளணி
தாயேநீவாருமம்மா தற்பரையாய்நின்றசத்தி
வாக்கிட்டால்தப்பாது வரங்கொடுத்தால்பொய்யாது
பொய்யாதுபொய்யாது பூமலர்தான்பொய்யாது
பூவிரண்டுபூத்தாலும் நாவிரண்டுபூக்காது
மறவரிடவாசலிலே மல்லிகைப்பூபூத்தாலும்
மறவரறிவாரோ மல்லிகைப்பூவாசனையை
குறவரிடவாசலிலே குடமல்லிபூத்தாலும்
குறவரறிவாரோ குடமல்லிவாசனையை
பன்றிமுதுகினில் பன்னீரைப்பூசினால்
பன்றியறியுமோதான் பன்னீரின்வாசனையை
எந்தனுலாகுமோதான் ஈஸ்வரியைத்தோத்தரிக்க
மைந்தனுலாகுமோதான் மாதாவைநமஸ்கரிக்க
பிள்ளையாலாகுமோதான் பெற்றவளைநமஸ்கரிக்க
பாலனுலாகுமோதான் பார்வதியைநமஸ்கரிக்க
எச்சிலொருகோடி இளந்தீட்டுமுக்கோடி
தீட்டிலொருகோடி தெருவெங்குந்தானுமுண்டு

கன்னிகள் தீட்டு கலந்தோடிவந்தாலும்
ஆறுதப்புநூறுபிழை அடியார்கள்செய்தாலும்
தாயேமனம்பொறுத்து தயவாகக்காருமம்மா
எச்சிற்கலந்ததென்று இடையப்போய்நின்றாலும்
தீட்டுகலந்தாலும் தேவிமனம்பொறுத்து
எச்சிற்கலந்தாலும் ஈஸ்வரியேமனம்பொறுத்து
பக்ஷம்வைத்துக்காருமம்மா பராபரியே அங்குகண்ணு
விருப்பம்வைத்துக்காருமம்மா விருதுபடைத்தசத்தி
நீலிகபாலியம்மா நிறைந்தபஞ்சாட்சரியே
சூலிகபாலியம்மா சுந்தரியேமாரிமுத்தே
நிஷ்டூரக்காரியரே விஸ்தாரமுள்ளசத்தி
வேப்பிலையால்தான்தடவி விசிறிமுத்தழுத்திவிடு
ஆனபராசத்தியரே யம்மைமுத்தழுத்திவிடு
இரங்கிரங்குந்தாயே ஈஸ்வரியேநான்பிழைக்க
படைவேட்டமர்ந்தவளே பரசுராமனைப்பெற்றவளே
ஊத்துக்காட்டமர்ந்தவளே உதிரபலிகொண்டவளே
விராம்பட்டணமமர்ந்தவளே வேதாந்தமாரிமுத்தே

சமைந்தாய்சமையபுரம் சாதித்தாய்கண்ணபுரம்
கண்ணபுரத்தெல்லையெல்லாம் காவல்கொண்டமாரியரே
எக்காலதேவியரே ஈஸ்வரியேயிறங்குமம்மா
திக்கெல்லாம்பேர்படைத்த தேசத்துமாரியரே
அண்டபுவனமெல்லாந் துண்டரிகமுள்ளசத்தி
கச்சிப்பதியாளே காமாட்சித்தாயாரே
கைலாசலோகமெல்லாம் காவல்கட்டியாண்டவளே
பாதாளலோகமெல்லாம் பரதவிக்கப்பண்ணசத்தி
காலைக்கொலுவிலம்மா காத்திருந்தாராயிரம்பேர்
உச்சிக்கொலுவிலம்மா உகந்திருந்தாராயிரம்பேர்
அந்திக்கொலுவிலம்மா அமர்ந்திருந்தாராயிரம்பேர்
வட்டியக்காரரெல்லாம் கலந்தெச்சரிக்கைபண்ண
பாடும்புலவரெல்லாம் பண்பிசைந்தபாடல்சொல்ல
வடுகர்துலுக்கரோடு மராட்டியர்கன்னடியர்
கன்னடியர்காவலுடன் கர்னூட்டுப்பட்டாணியர்
இட்டசட்டைவாங்காத இடும்பரெல்லாம்காத்திருக்க
[illegible]ருக்க

வடுகர் துலுக்கரம்மா மறுதேசபட்டாணியர்
வேடிக்கைபார்த்திருந்தாள் வேப்பஞ்சிலையாளும்
கேளிக்கைப்பார்த்திருந்தாள் கிளிமொழியாள்மாரிமுத்து
மாயமெல்லாமுன்மாயம் மருளரெல்லாமுன்மருளர்
மருளர்தழைக்கவம்மா மருமக்களீடேற
பலிச்சட்டிதானெடுக்கும் புத்திரர்கள்தான்றழைக்க
வேதங்கள்தான்றறைக்க விண்ணவர்களீடேற
குமாரவர்க்கந்தான்றழைக்க கொம்பனையேகண்பாரும்
மைந்தர்கள்தான்றழைக்க மாதாவேகண்பாரும்
காஞ்சிபுரியிலேதான் கர்த்தரையும் நீநினைந்து
கர்த்தரையும் நீநினைந்து காமாட்சிபூசைபண்ணுய்
கங்கைமுழுகியம்மா கிளிமொழியேதவமிருந்தாய்
வைகைமுழுகியம்மா வனமயிலேதவமிருந்தாய்
பொய்கைமுழுகியம்மா பெற்றவளேதவமிருந்தாய்
தவத்திலிருந்தவளே சத்தகன்னிதாயாரே
ஆற்றுமணலெடுத்து அரனுரையுண்டுபண்ணுய்
சேற்றுமணலெடுத்து சிவனுரையுண்டுபண்ணுய்

கம்பாநதியிலே காமாட்சி தவமிருந்தாய்
இருநாழிக்காதவழி திருநீற்றுக்கோட்டையிட்டாய்
திருநீற்றுக்கோட்டையிட்டாய் திகம்பரியேமாரிமுத்தே
அருணாசலந்தனிலே சன்யாசிமலையிலே
திருவண்ணாமலையிலேதான் தேவிதவமிருந்தாய்
அருணாசலந்தனிலே ஆத்தாள்தவமிருந்தாள்
சன்யாசிமலையிலே இருந்தாய்பெருந்தபசு
இருந்தாய்பெருந்தபசு இடப்பாகம்பேறுபெற்ருய்
இடப்பாகம்பேறுபெற்ருய் ஈஸ்வரியேமாதாவே
காகுத்தனில் கதம்பப்பொடி பூசிவைத்தால்
காகமறியுமோதான் கதம்பப்பொடிவாசனையை
கோக்குருத்தனில் கோமேதகங்கட்டிவைத்தால்
கோக்குமறியுமோதான் கோமேதகத்தினொளியை
சூலக்கனலின் முதன்மையாய்நின்றசக்தி
பாலனுக்குவந்த பாரஎரிச்சல்களில்
காலேரிவுகையோரிவு கட்டபூமிவாங்குமம்மா
நுதல் ...த்தல் குலமாரிடி நோவு

மண்டைக்குடைச்சலோடு மாரடைப்புதலைநோவு
வாதபித்தசீதசுரம் வல்பிணியைக்காருமம்மா
இடுப்புக்குடைச்சலைத்தான் ஈஸ்வரியேவாங்குமம்மா
பித்தபேரிவுகளைப் பெற்றவளேவாங்குமம்மா
கழுத்துவலியதனைக் கட்டழகிவாங்குமம்மா
பத்திரியான்தான்தடவி பராமுத்தழித்துவிடு
விபூதியைப்போட்டு இறக்கிவிடுமுத்திரையை
வேப்பிலைபட்டவிடம் வினைகள்பறந்தோடுமம்மா
பத்திரிபட்டவிடம் பாவம்பறந்தோடுமம்மா
விபூதிபட்டதக்ஷணமே வினைகள்பறந்தோடுமம்மா
பஞ்சாக்ஷரம்பட்டால் பாவங்கள்தீர்ந்துவிடும்
பத்தென்றுலிரண்டறியேன் பாலனம்மாவுன்னடிமை
எட்டென்றுலிரண்டறியேன் ஏழையம்மாவுன்னடிமை
நாகத்தின்கண்ணேயம்மா நல்லவிடைப்பாம்பே
சேஷத்தின்கண்ணேயம்மா சின்னவிடைப்பாம்பே
பாம்பேதலைக்கனைதான் வேப்பிலையோபஞ்சுமெத்தை
வேப்பம்பாலுண்டவளே வேதாந்தமாரிமுத்தே

ஐநூறுபாம்புனக்கு அள்ளியிட்டவிரசடை
விரசடைமேலிருந்து விமலியரேகொஞ்சுமம்மா
முந்நூறுசந்தி முதற்சந்தியுன்னுதென்றாய்
நாநூறுசந்தி நடுச்சந்தியுன்னுதென்றாய்
சந்திக்குச்சந்தி தனிச்சந்தியுன்னுதென்றாய்
விதிக்குவிதி வெளிச்சந்தியுன்னுதென்றாய்
பட்டத்தழகியம்மா படைமுகத்துராஜகன்னி
கன்னபுரத்தாளே காரணசவுந்தரியே
திருவிளக்குநாயகியே தேவிகன்னனூராளே
மணிவிளக்கின்மேலிருந்து மாதாவேகொஞ்சுமம்மா
விளக்கிற்குடியிருந்து மெல்லியரேகொஞ்சும்மா
திருவிளக்கின்மேலிருந்து தேவியரேகொஞ்சுமம்மா
கொஞ்சுமம்மாபெற்றவளே கோபாலன்தங்கையரே
சிரித்தார்முகத்தையம்மா செல்லரிக்கக்கண்டிடுவாய்
பரிகாசஞ்செய்தவரைப் பல்லைப்பிடுங்கிவைப்பாய்
மூலைவிட்டுப்பெண்களைத்தான் முற்றத்திலாட்டிடுவாய்
அரண்மனைப்பெண்களைத்தா னம்பலத்திலாட்டிடுவாய்
பாப்பார[illegible] கேப்பாதங்கட்டிடுவாய்

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri



தேற்பாதங்கட்டிடுவாய் துரந்தரியேமாதாவே
நடுவிதியிற்கொள்ளிவைத்து நானறியேனென்றிடுவாய்
கடைவிதியிற்கொள்ளிவைத்து கடக்கப்போய்நின்றிடுவாய்
கடியாவிஷம்போலே கடிக்கவிட்டுபார்த்திருப்பாய்
நீண்டாவிஷம்போலே நீண்டவிட்டுப்பார்த்திருப்பாய்
பாம்புகண்ணி நீலியம்மா பழிகாரிமாரிமுத்தே
தாயேதுரந்தரியே சர்வலோகமாதாவே
ஆருதகோபமெல்லாம் ஆச்சியரேவிட்டுவிடு
கடலில்மூழ்கியம்மா கடுக நீ வாருமம்மா
காவேரியில்தான்முழுகி காமாக்ஷிவாருமிங்கே
வந்தமனை வாழுமம்மா இருந்தமனை யீடேறும்
கஞ்சாவெறியன் கனவெறியன்பாவாடை
பாவாடைராயனைத்தான் பத்தினியேதானழையும்
தாயாரும்பிள்ளையுமாய் தற்காக்கவேணுமம்மா
மாதாவும்பிள்ளையுமாய் மனதுவைத்துகாருமம்மா
ஆத்தாளும்பிள்ளையுமாய் அன்புவைத்துக்காருமம்மா
காராடிபெற்றவளே காலுதலைநோகாமல்

காசிவளநாட்டைவிட்டுக் காரணியேவந்தமரும்
ஊசிவளநாட்டைவிட்டு உத்தமியேவந்தருளும்
பம்பைமுழங்கிவர பரமேளமார்பரிக்க
சிற்றுடுக்கைகொஞ்சிவரச் சிறுமணிகளோலமிட
வேடிக்கைப்பார்த்திருந்தாள் வேப்பஞ்சிலையாளும்
கேளிக்கைப்பார்த்திருந்தாள் கிளிமொழியாள்மாரிமுத்து
சமயபுரத்தாளே சாம்பிராணிவாசகியே
முக்கோணத்துள்ளிருக்கும் முதன்மையாய் நின்றசத்தி
நாற்கோணத்துள்ளிருக்கும் நல்லமுத்துமாரியரே
பஞ்சாக்ஷரப்பொருளே பார்வதியேபெற்றவளே
அறுகோணத்துள்ளிருக்கும் ஆதிபரமேஸ்வரியே
அஷ்டாக்ஷரப்பொருளே ஆனந்தமாரிமுத்தே
நாயகியேமாரிமுத்தேநாரணனுர்தங்கையரே
ஐம்பத்தோரட்சரியே ஆதிசிவன்தேவியரே
ஆதிசிவன்தேவியரே அம்மைமுத்துமாரியரே
பேருலகரக்ஷகப் பெருமாளுடன்பிறப்பே
பெருமாளுடன்பிறந்து பேருலகையாண்டவளே

ஆயனூர[illegible]ந்து அம்மைமுத்தாய்நின்றவளே
திரிகோணத்துள்ளிருக்கும் திரிபுரசவுந்தரியே
ஆருதாரப்பொருளே அபிஷேகபத்தினியே
மூலாதாரப்பொருளே முன்பிறந்ததேவதையே
தாயேதுரந்தரியே சர்வலோகேஸ்வரியே
பத்திரியால்தான்தடவி பாரமுத்தைத்தானிறக்கும்
வேப்பிலையால்தான்தடவி மெல்லியரேமுத்திறக்கும்
மேனியெல்லாந்தான்குளிர விளையாடிமுத்திறக்கும்
இறக்கிறக்குந்தாயாரே எங்களைக்காப்பாற்றுமம்மா
முத்திலுமுத்து முகத்திலிடுமாணிமுத்து
எங்கும்நிறைந்த எல்லார்க்குமாரிமுத்து
பெண்ணாய்ப்பிறந்து பேருலகையாளவந்தாய்
பேருலகையாளவந்தாய் பெண்ணரசிமாரிமுத்தே
நித்தம்பராமரிக்க நிஷ்டூரிநீபிறந்தாய்
தேசம்பராமரிக்க தெய்வகன்னிநீபிறந்தாய்
கிளியேந்தும்நாயகியே கிளிமொழியேதாயாரே
நித்தியகல்யாணி நீலிபரஞ்சோதி

அம்மணிபார்வதியே ஆணிமுத்துதாயாரே
லோகமெல்லாம்முத்தளக்கும் லோகபரமேஸ்வரியே।
வெற்றிக்கொடிபறக்க விருதுபம்பைதான்முழங்க
எக்காளமூதிவர எங்குங்கிடுகிடென்ன
பஞ்சவர்ணடால்விருது பக்கமெல்லாம்சூழ்ந்துவர
நாதசுரமேளம் நாட்டியங்களாடிவர
தப்பட்டைமேளம் தவின்முரசுதான்முழங்க
காளங்களூதிவர கவிவாணரேச்சரிக்க
சின்னங்களூதிவர சிறப்பாய்க்கொடிபிடிக்க
ஜண்டாசிலர்பிடிக்க தனிமுரசுதானடிக்க
கொடிகள்சிலர்பிடிக்க கொக்கரிப்பார்வீரமக்கள்
சாமரைகள்தான்வீச சந்திப்பார் வீரமக்கள்
தாரைபூரிசின்னம் ஆரவாரமாய்தான்முழங்க
தக்கையுடுக்கைகளும் தவிலோடுபம்பைகளும்
மிக்கதவுண்டைகளும் மிருதங்கந்தான் முழங்க
நன்குமடியுஞ்சுதியும் நன்றுகவூதிவர
தம்புருவீ[illegible]

பம்பையடித்துப் பறமேளந்தானதிர
கெண்செட்டுவாத்தியமும் கிளார்நெட்டுவாத்தியமும்
கொடிவாத்தியமும்புதிதாய் கொண்டுவந்தாருன்மக்கள்
இத்தனைவாத்தியங்கள் இசைக்கின்றார்பாருமம்மா
பார்த்துக்குளிருமம்மா பாங்கானவுன்மனது
கண்டுகுளிருமம்மா கல்லானவுன்மனது
எப்படியாகிலுந்தா னேழைகளுமீடேற
கண்பாரும்பாருமம்மா காரணசவுந்தரியே
இந்திரனுக்கொப்பா யிலங்குமகமாரியரே
கும்பத்தழகியம்மா கொலுமுகத்துராஜகன்னி
சகலகுற்றம்சகலபிழைதாயாரே நீபொறுப்பாய்
வணங்குகின்றமக்களுக்கு வாழ்வுமிகவளிப்பாய்
ஓங்காரரூபியென்று உன்னையேதோத்தரிக்க
பட்வேட்டில்விற்றிருக்கும் பரஞ்சோதிதாயாரே
ஆரறிவாருன்மகிமை ஆணிமுத்துதாயாரே
அண்டபுவனமெல்லாம் அம்மாவுனைத்தொழுவார்
தேசங்களெங்குந் தேவியைத்தோத்தரிப்பார்

Funding: IKS/Tattva Heritage. Digitization: Sarayu Trust/eGangotri

எள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்கும்நிறைந்தசக்தி
எங்கும்நிறைந்தவளே எல்லார்க்குந்தாயாரே
அஞ்சலென்றவஸ்தமோடு அடியார்தமைகாக்க
வேப்பிலையுங்கையில் விபூதியெங்குந்தூளிதமும்
கருணகடாக்ஷம்வைத்து காக்குமகமாயிவுந்தன்
சரணாரவிந்தமதைத் தந்தருளும்மாரிமுத்தே
உன்பேர்நினைத்தால்பில்லி பிசாசுபறந்தோடுமம்மா
சூனியமும்வைப்பும் சூழன்றலைந்தோடிவிடும்
பாதாளவஞ்சனமும் பறந்துவிடும்உன்பேர்நினைத்தால்
சத்தகன்னிமாதாவே சங்கரிமனோன்மணியே
கரகத்தில்வீற்றிருக்கும் கன்னனூர்மாரிமுத்தே
சூலங்கபாலமுடன் துய்யடமரகமும்
ஓங்காரரூபமம்மா ஒருவரறிவாரோ
மகிமையறிவாரோ மானிடர்கள்யாவருந்தான்
அடியார்தமைகாக்கும் மந்திரநிரந்தரியே
அடியார்கள்செய்தபிழை ஆச்சியரே நீபொறுப்பாய்
கோயிலடி [illegible]

சன்னதிபிள்ளையைத்தான் தற்காரும்பெற்றவளே
உன்னையல்லால்வேறுதுணை ஒருவரையுங்காணேனம்மா
வருந்துவார்பங்கில் வளமாய்குடியிருப்பாய்
பாவாடைக்காரியம்மா பராபரியே அங்குகண்ணே
உன்றுகின்றதேவதைக ளடுத்துகின்றதேவதைகள்
கட்டுபட்டதேவதைகள் காக்கின்றதேவதைகள்
இந்தமனையிடத்தி லிருந்துண்ணும்தேவதைகள்
சாம்பிராணிதூபத்திற்குட்பட்டதேவதைகள்
அனைவோரும் வந்திருந்து அடியாரைக்காக்கவேணும்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
ஓலைப்பூமண்டபத்தில் உகந்துகொலுவிருந்தாள்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினசிம்மாதனமாம்
இரத்தினசிம்மாதனத்தி லிருந்தரசுதான்புரிவாள்
மூன்றாம்படித்தளமாம் முனைமுகப்பூச்சாலைகளாம்
முனைமுகப்பூச்சாலைகளில் முந்திக்கொலுவிருந்தாள்
நான்காம்படித்தளமாம் நவரத்தினமண்டபமாம்
நவரத்தினமண்டபத்தில் நாயகியும்வந்தமர்ந்தாள்

ஐந்தாம்படித்தளமாம் அழுந்தியசிம்மாதனமாம்
அழுந்தியசிம்மாதனத்தில் ஆயிகொலுவிருந்தாள்
ஆரும்படித்தளமாம் அலங்காரச்சாவடியாம்
அலங்காரச்சாவடியில் ஆச்சிபரும்வந்திருந்தாள்
ஏழாம்படித்தளமாம் எழுதியசிம்மாதனமாம்
எழுதியசிம்மாதனத்தி லிஸ்வரியாள்கொலுவிருந்தாள்
எட்டாம்படித்தளமாம் விஸ்தாரமேடைகளாம்
விஸ்தாரமேடைகளில் விமலியரும்வந்தமர்ந்தாள்
ஒன்பதாம்படித்தளமாம் ஒருமுகமாய்நின்றசத்தி
ஒருமுகமாய்நின்றசத்தி உத்தமியுங்கொலுவிருந்தாள்
பத்தாம்படித்தளமாம் பளிங்குமாமண்டபமாம்
பளிங்குமாமண்டபத்தில் பத்தினியாள்கொலுவிருந்தாள்
ஆத்தாள்கொலுவிலேதான் ஆருர்கொலுவிருந்தார்
ஐங்கரனும்வல்லபையும் அன்பாய்க்கொலுவிருந்தார்
தொந்திவயிற்றேனும் துந்துபியுங்கொலுவிருந்தார்
குழந்தைவடிவேலன் குமரேசர்தானிருந்தார்
தோகைமயிலேறும் சுப்பிரமணியர்கொலுவிருந்தார்

சிங்கவாகனமேறுந் தேவிகொலுவிருந்தாள்
ஓங்காரக்குங்காளி உத்தமியாள் கொலுவிருந்தாள்
துர்க்கையொடுகாளி தொடர்ந்துகொலுவிருந்தாள்
வள்ளிதெய்வானையுடன் மகிழ்ந்துகொலுவிருந்தாள்
பச்சைமலைநாயகியாள் பைங்கிளியாள்தானிருந்தாள்
பூவைக்குறத்தியரும் பொருந்திக்கொலுவிருந்தாள்
வாழ்முனியும்செம்முனியும் வந்துகொலுவிருந்தார்
காத்தான்கருப்பனோடு கட்டழகர்வீற்றிருந்தார்
கோட்டையந்துச்சின்னனும் துரைமகனுந்தாமிருந்தார்
மருமக்களெல்லோரும் மகிழ்ந்துகொலுவிருந்தார்
குமாரர்களெல்லோரும் கூடிக்கொலுவிருந்தார்
ஆரியமாலையுட னனைவோரும்வீற்றிருந்தார்
ஆயன்பெருமா ளனந்தசயனனென்னும்
மாயன்பெருமாள் மங்கைமணவாளன்
ஐவரையுங்காத்த ஆதிநெடுமாலும்
பஞ்சவரைக்காத்த பாரளந்தோன்தாமிருந்தார்
கோப்பரைக்காத்த கோபலர்தாமிருந்தார்

முட்டையிற்குஞ்சு முகமறியாப்பாலகரை
பிட்டுவளர்த்தெடுத்த பெருமாள்கொலுவிருந்தார்
செட்டையிற்காத்த ஜெயராமர்சீதையரும்
அலமேலுமங்கையம்மா ளரிராமர்சீதையரும்
மங்கையொடுலட்சுமியும் மகிழ்ந்துக்கொலுவிருந்தார்
சீதேவிபூதேவி சேர்ந்துக்கொலுவிருந்தார்
பாஞ்சாலனெக்கியத்தில் பதுமைபோல்வந்துதித்த
பத்தினியாள்துரோபதையும் பாரக்கொலுவிருந்தார்
தளராதனஞ்செயரும் தருமர்கொலுவிருந்தார்
வாயுதேவன்புத்திரனூர் மதவிமன்தானிருந்தார்
தேவேந்திரன்புத்திரனூர் தேர்விஜயன்தாமிருந்தார்
நகுலசகாதேவர் நலமாய்க்கொலுவிருந்தார்
கானக்குயிலழகர் கட்டழகர்விற்றிருந்தார்
ஐவர்களுங்கூடி அன்பாய்க்கொலுவிருந்தார்
பட்டத்தரசி பைங்கிளிசுபத்திரையும்
ஆயன்சகோதரியா ளாரணங்குவிற்றிருந்தாள்
நல்ல[illegible] பெரும்மாள்

அந்தமுள்ளசுந்தரியா ளாரணங்குவிற்றிருந்தாள்
மலையனூர்தானமர்ந்த மாரிக்கொலுவிருந்தாள்
கைச்சூலங்கபரையும் கையிற்கபாலமுடன்
பச்செலும்புதின்றால் பாலொழுகுமென்றுசொல்லி
சுட்டெலும்புதின்றவளே சுடலைவனங்காத்தவளே
அக்காளும்தங்கையரும் ஐந்திரண்டேழ்பேரும்
ஐந்திரண்டேழ்பேரும் அங்கேகொலுவிருந்தார்
தங்காதுபேய்பில்லி தன்பேரைச்சொன்னவுடன்
அங்காளஈஸ்வரியும் அமர்ந்துகொலுவிருந்தார்
தொல்லைவினை நீங்கச்சுகுணமதையளிக்கும்
எல்லைப்பிடாரியரும் இங்கேகொலுவிருந்தார்
காவலர்கள்தான்புகழக் கனகசிம்மாதனத்தில்
காவலதிகாரி கட்டழகிவிற்றிருந்தாள்
இந்தமனைமுதலா யேழுமனையுன்காவல்
சந்ததமுன்காவல் சாதுகுணமாரியரே
காவல்பதனமம்மா கட்டழகிமாரியரே
காவலுக்குள்ளே களவுவரப்போகுதம்மா

பாரசவுக்கிட்டுப் பத்திரமாய்காருமம்மா
திராவினைகளைத்தான் தீர்க்கும்பராபரியே
தாழும்பதிகளைத்தான் தற்காத்துரட்சியம்மா.
ஏழுபிடாரியும் இசைந்துக்கொலுவிருந்தார்
முத்தாலுராவுத்தன் முனையுள்ளசேவகனும்
முற்றத்தில்வந்து முனைந்துகொலுவிருந்தார்
பூவாடைகங்கையென்று பூரித்துகாத்திருக்கும்
பாவாடைராயனும் பக்கங்கொலுவிருந்தார்
நாட்சியில்லாதசிவ சங்கரியானென்றுசொல்லும்
ஆட்சியுடன்கொலுவில் அமர்ந்துகொலுவிருந்தார்
தேவித்திருக்கொலுவில் சேர்ந்துக்கொலுவிருந்தார்
ஆயித்திருக்கொலுவில் அமர்ந்தாரனைவோரும்
மாரிக்கொலுவில் மனமகிழ்ச்சியாயிருந்தார்
விரிக்கொலுவில் விற்றிருந்தாரெல்லோரும்
ஆலித்துதானிருந்தார் அம்மைத்திருக்கொலுவிலுல்
பாலித்துதானிருந்தார் பராபரியாள்தன்கொலுவில்
கூடிக்கொலுவிருந்தார் கொம்பனையாள்தன்கொலுவில்

நாடிக்கொலுவிருந்தார் நாரணியாள் தன்கொலுவில்
சந்தேகம்போக்கிச் சாயுச்சியமடைய
சந்தோஷமாகத் தாமிருந்தாரெல்லோரும்
நாடுதழைக்கவம்மா நல்லோர்மிகவாழி
மாடுதழைக்கவம்மா மானிலத்தோர் தான்வாழி
பாரிலுள்ள ஆடவரும் பாலகரும்மங்கையரும்
ஆரியரும்மற்றோரும் யாவர்களுந்தான்படிக்க
முன்னாளில்மூத்தோர் மொழிந்ததாலாட்டை
இன்னாளில்போற்ற எழுதாயெழுத்ததனால்
அச்சுக்கூடத்திபர் அநேகரிதுவரையில்
உச்சிதமாயச்சிலிதை யோங்கிப்பதிப்பதிப்பித்தார்
கற்றோருமற்றோருங் களிப்பாய்ப்படிப்பதற்கு
சொற்குற்றமில்லாமல் சுத்தப்பிரதியதாய்
பாரிலுள்ளோரிக்கதையை படித்துத்தொழுதேற்ற
கற்றவரும்மற்றவரும் களிப்படையவாழி
சங்கரனுஞ்சங்கரியும் அறுமுகனுந்தான்வாழி
செங்கண்மால்ஸ்ரீராமர் சீதையருந்தான்வாழி

பஞ்சவர்களைவரும் பைங்கிளியாள் துரோபதையும்
அல்லிசுபத்திரையும் அனைவோருந்தான்வாழி
முப்பத்துமுக்கோடி தேவர்களும்வாழி
சொற்பெரியசோம சூரியாக்கினிவாழி
நாற்பத்தெண்ணாயிரம் நன்முனிவர்தான்வாழி
கார்க்குங்கருடசித்தர் வித்தியாதரர்வாழி
சந்திரனுஞ்சூரியனுந் தானவர்கள்தான்வாழி
இந்திரனுந்தேவர்களும் எல்லோருந்தான்வாழி
கற்பகக்காவும் காமதேனும்வாழி
பற்பலதீவும் பஞ்சாக்ஷரம்வாழி
காத்தநெடுவீரன் கறுப்பன்மிகவாழி
சங்கிலிகறுப்பன் சப்பாணிதான்வாழி
மாடனிருளன் வடுகனுந்தான்வாழி
பாவாடைராயன் பலதேவரும்வாழி
இக்கதைகேட்டோர் என்னாளுந்தான்வாழி
பெருமையுடன்கேட்கும் பெரியோர்மிகவாழி
ஊரெங்குங்கீர்த்திபெற்ற உத்தமருந்தான்வாழி

பாருலகிலிக்கதையை படித்தோர்மிகவாழி
நாயகியாள்தன்கதையை நாள்தோறும்வாசிப்போர்
பாரினில்புத்திரபாக்கியம் படைத்துமிகவாழ்வாரே
மாரித்திருக்கதையை மகிழ்ந்துமேகேட்டோரும்
தேவிதிருக்கதையை தீர்க்கமாய்கேட்டோரும்
பாடிப்படித்தோரும் பாக்கியத்தைத்தான்பெறுவார்
நாடித்துதிப்போரும் நற்கதியைத்தானடைவார்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திருப்பார்

மங்களம் மங்களம் மாரியம்மன் தன்கதைக்கு
எங்கும் நிறைந்த ஈஸ்வரிக்கு மங்களமாம்.

மாரியம்மன் தாலாட்டு முற்றிற்று,

—◎—